24th February 1961]

*Aids for disabled persons*

* 444 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அங்கஹீனர்கள் பயன்படுத்தக்கூடிய சாதனங்களைத் தயார் செய்யக்கூடிய தொழிற்சாலை சென்னை மாகாணத்தில் எந்த இடத்தில் ஏற்படுத்தப்படும் ?

(இ) இத்தொழிற்சாலை ஏற்படுத்தி நடத்துவதற்கான செலவினங்களுக்காக (1) மத்திய சமூக க்ஷேம நல போர்டு மூலமாகவும், (2) இந்திய சர்க்கார் மூலமாகவும், (3) சென்னை சர்க்கார் மூலமாகவும் எவ்வளவு உதவித் தொகை கிடைக்கும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) No proposal is under consideration for establishing a factory of the kind referred to by the Member. The Government have, however, sanctioned a scheme for starting an Artificial Limb and Orthopædic Splint-making Centre in the Government General Hospital, Madras. The entire expenditure on the scheme will be met from the State funds.

SRI P. G. MANICKAM : இவ்வாறு ஸ்டேட் பண்ட் மூலமாக ஒரு ஸ்கீம் ஏற்படுமானால் அதன் மூலமாக சாமான்களை விற்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ? அப்படி விற்கப்படுமானால் குறைந்த விலையிலோ அல்லது மிகவும் ஏழ்மையாக உள்ளவர்களுக்கு இலவசமாகவோ கொடுப்பதற்கு அரசாங்கம் கவனிக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தச் சாமான்கள் எல்லாம் தயார் பண்ணியபிறகு அதை விலைக்கு விற்கும்போது விலையைக் குறைக்கலாமா என்பதுபற்றி யோசிக்கப்படும்.

*Gramasevaks (Houses)*

* 445 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் நமது மாநிலத்தில் எந்தெந்த வட்டார அபிவிருத்திப் பகுதிகளில் கிராம சேவக்குக்களுக்கு எத்தனை வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன ?

(இ) எத்தனை அபிவிருத்திப் பகுதிகளில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படவில்லை ?

(உ) எல்லா அபிவிருத்திப் பகுதிகளிலும் ஓரேவித முறை கையாளாததற்குக் காரணமென்ன ?